[7th April 1958

*Minor ports*

* 587 *Q.*—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Public Works be pleased to state—

(*a*) the amount allotted for the development of minor ports in 1957–58;

(*b*) the amount spent so far;

(*c*) the amount of grant or loan received from the Central Government; and

(*d*) the present stage of the various works taken up for execution?

THE HON. SRI P. KAKKAN : The attention of the hon. Member is invited to the paper [a] placed on the table of the House.

**SRI N. K. PALANISAMI :** நாகப்பட்டணம், கடலூர் ஆகிய இரண்டு இடங்களிலுமுள்ள துறைமுகங்கள் விஷயத்தில்தான் வேலை செய்யப்பட்டிருக்கிறது. பாக்கி இருக்கும் துறைமுகங்களுக்கு ஏன் பணம் ஒதுக்கவில்லை ?

**THE HON. SRI P. KAKKAN :** ஏன் பணம் ஒதுக்கவில்லை என்ற பிரச்னை இல்லை. முதலில் நாகப்பட்டணம், கடலூர் ஆகிய இவ்விரு இடங்களிலுள்ள துறைமுகங்களைத்தான் அரசாங்கம் எடுத்து வேலை செய்வதாக உத்தேசம்.

**SRI S. M. ANNAMALAI :** மத்திய சர்க்காரிடமிருந்து கிடைக்கக் கூடிய தொகை ரூ. 4,51,825 என்று இருக்கிறது. இதில் கிராண்டு எவ்வளவு ? லோன் எவ்வளவு ?

**THE HON. SRI P. KAKKAN :** மத்திய சர்க்காரிடமிருந்து கிராண்டாகக் கிடைத்தது நாகப்பட்டிணம் துறைமுகத்திற்காக ரூ. 4,27,325 கடலூர் துறைமுகத்திற்காக ரூ. 24,500.

**SRI K. B. S. MANI :** பழங்காலப் பெருமை பெற்ற தரங்கம்பாடி துறைமுகம் சம்பந்தப்பட்ட ரிகார்டுகளை மத்திய சர்க்காருக்கு அனுப்பியிருப்பதாக கடந்த ஆண்டிலே நமது மந்திரி அவர்கள் தெரிவித்தார்கள். அது சம்பந்தமாக இதுவரை ஏதாவது தகவல் வந்ததா ? அப்படியானல் அதுபற்றி என்ன நடவடிக்கை எடுக்கப்போகிறுர்கள் ?

**MR. SPEAKER :** கனம் அங்கத்தினர் தனிக் கேள்வி போடவேண்டும்.

**SRI A. GOVINDASAMY :** கடலூர் துறைமுகம் அமையும் நேரத்தில் புதுச்சேரியில் ஒரு 'பியிர்' கட்டியிருப்பதுபோல் கடலூர் துறைமுகத்திலும் ஒன்று கட்டுவதற்கு அரசாங்கம் யோசிக்குமா ?

**THE HON. SRI P. KAKKAN :** கனம் அங்கத்தினர் தனிக் கேள்வி போடவேண்டும்.

*Electricity for agriculturists*

* 588 *Q.*—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Electricity be pleased to state whether the Government considered any proposal to reduce the charges on electricity consumed by agriculturists by $6\frac{1}{4}$ per cent on the recommendation of the Pykara Electricity System, Coimbatore?

THE HON. SRI V. RAMAIAH : No, Sir.

---

[a] Printed as Appendix IV on pages 89-90 infra.

7th April 1958]

SRI N. K. PALANISAMI : 1956-ம் வருஷத்தில் அக்டோபர் மாதத்தில் சர்க்காருக்கு அந்த இலாகாவிலிருந்து சிபாரிசு வந்திருக்கிறதா? அதாவது விவசாயத்திற்கான மின்சாரக் கட்டணத்தை இப்பொழுது இருப்பதிலிருந்து $6\frac{1}{4}$ சத விகிதம் குறைக்க வேண்டும் என்ற சிபார்சு வந்திருக்கிறதா ? அப்படியானால், அதன் பேரில் என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டிருக்கிறது ?

THE HON. SRI V. RAMAIAH : அதுபோன்ற சிபார்சு அரசாங்கத்திற்கு வரவில்லை.

SRI V. K. RAMASWAMY MUDALIYAR : So far as the supply of electrical energy to agriculturists is concerned, I find some disparity between areas and areas. I find that in certain areas they are collecting at the rate of Rs. 35 as u.c.m. whereas in certain areas they are collecting at Rs. 50 as u.c.m. May I request th Hon. Minister to tell the reason for this disparity?

THE HON. SRI V. RAMAIAH : In the collection of minimum charges there is no disparity at all. From every scheme a return of ten per cent is expected. In the calculation of this ten per cent the amount may vary from scheme to scheme.

SRI N. K. PALANISAMI : சர்க்காருக்கு இப்பொழுது வரக்கூடிய வருமானம் குறையாமலேயே விவசாயிகளுக்கு கொடுக்கும் மின்சாரத்திற்கான இந்தக் கட்டணத்தைக் குறைக்க சர்க்கார் ஏதாவது ஏற்பாடு செய்வார்களா ?

THE HON. SRI V. RAMAIAH : இதற்குத் தனி கேள்வி வேண்டும்.

*D.M.K.*

* 589 Q.—SRI A. GOVINDASAMY : Will the Hon. the Minister for Home be pleased to state the class in which M.Ps. and M.L.As. belonging to Dravida Munnetra Kazhagam who were arrested under the Preventive Detention Act were placed in Jail? 9 a.m.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : No M.L.A. or M.P. belonging to the Dravida Munnetra Kazhagam was arrested under the Preventive Detention Act. Therefore the question does not arise.

SRI A. GOVINDASAMY : திராவிட முன்னேற்றக் கழகத்தைச் சேர்ந்தவர்கள் எந்தச் சட்டத்தின் கீழ் கைதி செய்யப்பட்டார்கள் என்று சொல்லமுடியுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : க்ரிமினல் ப்ரொஸீஜர் கோட் 151–வது பிரிவுப்படி கைதி செய்யப்பட்டார்கள்.

SRI S. LAZAR : குற்றம் செய்யக்கூடிய குற்றவாளிகளை திராவிட முன்னேற்றக் கட்சியைச் சேர்ந்தவர்களாக இருந்தாலும்கூட சாதாரண கைதிகளை மூன்றாவது வகுப்பில் வைக்கும்போது அந்தக் கட்சியைச் சேர்ந்த எம்.பி., எம்.எல்.ஏ. முதலியவர்களும், தலைவர்களும் தங்களுக்கு ஏதாவது ஸ்பெஷல் க்ளாஸ் வேண்டுமென்று கோரிக்கையை அனுப்பியிருக்கிறார்களா என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அந்தமாதிரி திராவிட முன்னேற்றக் கட்சியைப் பொறுத்தமட்டில் யாரும் தண்டிக்கப்பட்டு சிறையில் இருக்கிறார்கள் என்று நினைக்கவில்லை. ஆகவே இந்தப் பிரச்னை எழவேயில்லை.